# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

• Volume : 2 • Issue : 7 • September 2015 • Annual Subscription Rs. 100/- • இதழ்: 7 • செப்டம்பர் 2015 • வருடச் சந்தா ரூ.100/-

பழனியில் 3 நாள்

## ஞானமுகாம்

வழங்குபவர் :

**ஸ்ரீ பகவத் ஐயா**

அவர்கள்

இடம் : **மெய்த்தவ பொற்சபை,**

நேதாஜி நகர், திண்டுக்கல் ரோடு, **பழனி.**

நாள் :

02-10-2015 வெள்ளிக்கிழமை

காலை 8-30 மணி முதல்

4-10-2015 ஞாயிறு

மதியம் 3-00 மணி வரை

பக்கம் : 10

## இறைநிலையை உணர்வது எப்போது?

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





நமக்கு ஏற்படும் அனைத்து உணர்ச்சிகளும் இந்த சித் அம்சமான இறைநிலையின் வெளிப்பாடே. அனைத்து உணர்ச்சிகளும் இறை அம்சமே. மற்றபடி இறை அனுபவம் என்ற பெயரைக் கொண்ட தனித்த அனுபவம் என்று எதுவும் கிடையாது.

– ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விருப்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விருப்புகிறீர்களா?



Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com






# ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்கள்

## தமிழ்

| ஞான விடுதலை | கவலைகள் அனைத்திற்கும் தீர்வு
| ஞானமலர்வு | தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு!
| ஞானப்பட்டறை | நான் யார்? | சும்மா இரு | சத்தரிசனம்
| நீங்களும் ஞானியாகலாம் | வேதாந்தம் | சூன்யப் பிரவாகம்
| தேடிப் போக வீடு இல்லை | அனுஷ்டான ஆன்மிகம்
| ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | ஆன்ம ஞான ரகசியம்
| ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு | ஆகாமிய கர்மா
| ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்
| பகவத் பாதை ( ஞானப்பெட்டகம் 2011-2014 ) Vol-1

## ஆங்கிலம்

| Understanding Enlightenment (Yogi Imprissions Publications)
| Give up Meditation! Get Enlightenment!
| Don't Delay Enlightenment | Renounce God, Be God
| Absolute Reality | Divine You

## கிடைக்கும் இடங்கள்

| | ஊர் | போன் நம்பர் |
|---|---|---|
| 1. | சேலம் அம்மாப்பேட்டை | 97891 65555 |
| | அஜந்தா புக் சென்டர் | 0427-2417755 |
| 2. | சென்னை | |
| | அம்பத்தூர் | 98840 97438 |
| | வெஸ்ட் மாம்பலம் | 94444 02986 |
| | வேளச்சேரி | 94444 02986 |
| | பெரம்பூர் | 99405 02239 |
| | மாடம்பாக்கம் | 94448 99858 |
| 3. | திருச்சி | |
| | Zen Sangh அகநூலகம் | 98940 12639 |
| 4. | பரமத்தி வேலூர் | 93605 79181 |
| 5. | திருப்பூர் | 99440 44988 |
| 6. | மயிலாடுதுறை | 91504 05092 |
| 7. | மதுராந்தகம் (காஞ்சிபுரம் மாவட்டம்) | 93446 72981 |
| 8. | திண்டுக்கல் | 0451-2423311 |
| 9. | கோவை | |
| | விஜயா பதிப்பகம் | 0422-2394614, 2382614 |
| | பீளமேடு | 95660 39408 |
| 10. | திருவண்ணாமலை | 94434 23495 |
| 11. | மதுரை | 0452-2310570 |
| 12. | திருநெல்வேலி | |
| | அருள் நந்தி சிவம் | 0462-2339692 |
| | ஈகிள் புக் ஸ்டோர் | 0462-2578899 |
| 13. | தஞ்சாவூர் | 98947 26162 |
| 14. | கேரளா | 098470 40786 |
| 15. | மும்பை | 098202 49653 |

## பகவத் ஐயாவை நேரில் சந்திக்க

**02.9.2015 முதல் 14.9.2015 வரை – பெங்களூரு**
**15.9.2015 முதல் 1.10.2015 வரை – திருச்செந்தூர்**
**5.10.2015 முதல் 09.10.2015 வரை – சென்னை**
**12.10.2015 முதல் 1.11.2015 வரை – சென்னை**

**ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் 99442 15677 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு முன் அனுமதி பெற்று சந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.**



# இறைநிலையை உணர்வது எப்போது?

நமது சொற்பொழிவின் போது, அதில் பங்கு பெற்ற ஒருவர் கேள்வி ஒன்றைக் கேட்டிருந்தார்.

"நீங்கள் கூறுவது போல் சும்மா இருந்தால் கடவுள் நிலையை உணர்வது எப்பொழுது? எவ்வளவு காலம் ஆகும்?"

–இது அவரது கேள்வி.

பொதுவாக ஆன்மிக உலகில் இறைவனை அடைவது, இறை உணர்வை அடைவது என்று பேசப்படுகிறது. அதுதான் மனித வாழ்வின் இலக்கு என்றும் கூறப்படுகிறது.

ஞானிகள் பலரும் இவ்வாறு கூறி விடுவதால் இக்கருத்து மேலும் வலுவடைந்து விடுகிறது.

நாம் தோன்றி மறையக் கூடியவர்கள்; ஆனால் இறைவன் தோற்றமும், முடிவும் இல்லாதவர்.

–இப்படிக் கூறப்படுகிறது.

ஆகவே நாமும் முடிவற்ற ஒன்றோடு இணைந்திடுவோமானால்

நாமும் பிறப்பு இறப்பைக் கடந்து விடுவோம் என எண்ணுகிறோம்.

அந்நிலையை அடைவதையும் விரும்புகிறோம்.

ஆனால் இறைவனை எங்கே சென்று அறிவது?

இறைவன் சந்திரமண்டலத்தில் இருந்தால் கூட அங்கே சென்று அவரை அறிந்து கொள்ளலாம். ஆனால் அவர் அப்படி இல்லை.

அவர் உயிருக்கும் உயிராக இருக்கிறார் என்று கூறி விடுகிறார்கள்.

உயிருக்கும் உயிரான அவரை எப்படித் தான் அறிவது?

தியானத்தின் மூலம், நம்முடைய ஆதார சக்திக்குள் நுழைவதா?

உயிருக்கும் உயிரான இறைநிலைக்குள் நாம் எவ்வாறு பிரவேசிப்பது?

அறியப்படும் பொருளை மட்டுமே நம்மால் அறிய முடியும்.

அறிபவன் வேறு; அறியப்படும் பொருள் வேறு;

இறைவன் - இறை நிலை என்பது ஓர் அறியப்படும் பொருளா?

இறைவன் ஒருபோதும் அறியப்படும் பொருளாக இருக்க முடியாது என்பது

இறைநிலை பற்றிக் கூறுபவர்களாலேயே கூறப்பட்ட ஒன்று.

அறிய முடியாத ஒன்றை நம்மால் எப்படித் தான் அறிய முடியும்?

அப்படியானால் இறைவனை அறிவது தான் எவ்வாறு? இறை நிலையை உணர்வது தான் எவ்வாறு?

இரவு நேரத்தில் அனைத்தும் இருட்டாக இருக்கிறது. எந்தப் பொருளும் நமக்கு புலப்படுவவில்லை.

உடனடியாக நாம் ஒரு விளக்கை எடுத்து வருகிறோம். விளக்கு வெளிச்சத்தில் பொருட்கள் அனைத்தும் நமக்குத் தெரிகின்றன.

வெளிச்சம் இல்லாவிட்டால் அந்தப் பொருட்கள் இருப்பதே நமக்குத் தெரியாது.

இப்போது நாம் பார்த்த உதாரணத்தில் ஒரு சின்ன மாறுதல்.

இப்போது நாம் பார்க்க வேண்டியது பொருட்களை அல்லாமல் ஒளிர்ந்து கொண்டிருக்கும் விளக்கை என்று வைத்துக் கொள்வோம்.

எல்லாப் பொருட்களையும் விளக்கின் உதவியோடு பார்த்தது போல்,

அந்த விளக்கைப் பார்ப்பதற்கும் இன்னுமொரு விளக்குத் தேவைப்படுமா?

விளக்கு சுய ஒளியோடு இருப்பதால், விளக்கைக் காட்டுவதற்கு என இன்னுமொரு விளக்கு தேவைப்படுவதில்லை.

இறை உணர்வு என்பதும் இப்படித்தான்.

இறை உணர்வு என்பது சுய ஒளியுடையது.

உணர்வுக்கும் உணர்வாக இருக்கும் இறையுணர்வை அறிய

இன்னுமொரு உணர்வு தேவையில்லை. அப்படி அறியவும் முடியாது.

இதுபற்றிய விரிவான விபரங்களை நம்முடைய ''வேதாந்தம்'' என்னும் புதிதாக வெளிவந்த நூலில் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

இங்கு நாம் நமது ஆய்வை சுருக்கமாகப் பார்த்திடுவோம்.

இரவின் போது நாம் ஓர் அறையினுள் அமர்ந்திருக்கிறோம். விளக்கு வெளிச்சத்தில் அறையிலிருக்கும் பொருட்கள் அனைத்தும் நமக்குத் தெரிகின்றன. திடீரென மின் தடங்கல் ஏற்பட்டு விளக்கு அணைந்து விடுகின்றது. எங்கும் இருள் சூழ்ந்து விடுகின்றது. எந்தப் பொருள் இருப்பதும் நம் கண்களுக்குப் புலப்படுவதில்லை.

நாம் இருப்பது நமக்குத் தெரிகிறது. உணர்வுப்பூர்வமாக நாம் இருப்பதை நாம் உணர்ந்தறிகின்றோம்.

இப்படி இருப்புணர்வாக இருப்பது தான் இறையுணர்வு என்று கூறப்படுகிறது. உணர்வின் அம்சமாக உள்ளது தான் இறை உணர்வு. அது சித் சொரூபம் என்று கூறப்படுகிறது. சித் என்பது அறிவு – உணர்வு.

இருளில் நாம் இருப்பது நமக்கே தெரிகிறது. உணர்வு அம்சமாகத் தெரிகிறது. அனுபவ அம்சமாகத் தெரிகிறது.

இப்படி நம்முடைய சித் அம்சம், தன்னைத்தானே உணர்வுப் பூர்வமாக வெளிப்படுத்திக் கொள்ளுமா?

இறைநிலையானது இப்படி ஒரு தன்னுணர்வாக தன்னைத்தானே வெளிப்படுத்தி அறிந்து கொள்ளுமா?

ஓர் உதாரணம். எரியும் நெருப்பில் நாம் நமது கையைக் காட்டுகிறோம். நெருப்பின் வெம்மை நமது கைகளில் தெரிகிறது. நெருப்பின் உஷ்ணமான தன்மையை நம்மால் உணர முடிகிறது.

இப்போது நாம் நமது கைகளை ஐஸ் கட்டியில் வைத்திருக்கிறோம். ஐஸ் கட்டியின் குளிர்ந்த தன்மையை நம்மால் உணர முடிகிறது.

நெருப்பையும் இப்படித்தான் உணர்ந்தோம். ஐஸ்கட்டியையும் இப்படித் தான் உணர்ந்தோம்.

இங்கு நாம் எதனை உணர்ந்துள்ளோம்? நெருப்பையா? அல்லது ஐஸ் கட்டியையா?

உண்மையில் நம்மால் நெருப்பையோ அல்லது ஐஸ்கட்டியையோ உணர முடியாது.

நெருப்பானது நம் கைகளில் ஏற்படுத்தும்

உணர்ச்சியைத் -**Reaction** ஐத்தான் நம்மால் உணரமுடியும்.

ஐஸ்கட்டி நம் கைகளில் ஏற்படுத்தும் உணர்ச்சியைத்தான் நம்மால் உணர முடியும்.

நெருப்பைத் தொடும் போதும் நாம் நமது கைகளைத்தான் அறிகிறோம். ஐஸ்கட்டியைத் தொடும் போதும் நமது கைகளைத்தான் அறிகிறோம்.

நமது கைகளை மட்டுமே நம்மால் அறிய முடியும். அதைத்தவிர வேறு எதனையும் நம்மால் அறியமுடியாது.

நமது கைகளை எப்படி அறிகிறோம்? நெருப்பின் தொடர்போடு நமது கைகளை உஷ்ணமாக அறிந்தோம். பிறகு ஐஸ்கட்டியின் தொடர்போடு குளிராக உணர்ந்தோம்.

நெருப்பு மற்றும் ஐஸகட்டியின் தொடர்பு இல்லாமல் நமது கைகளை மட்டும் தனியாக அறிய முடியுமா?

கைகளின் இருப்புணர்வை மட்டும் தனியாக அறிய முடியுமா?

அவை, அவையாக மட்டும் என்ன உணர்வோடு இருக்கின்றன?

இப்படித்தான் இறையுணர்வும் அமைந்திருக்கிறது. நம் உயிருக்கும் உயிராக, சித் அம்சமாக இருக்கும் இறை அம்சம், இப்படி இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

நம்முடைய உடல் மற்றும் மன உணர்ச்சிகளாக வெளிப்படும் அனைத்தும் இந்த சித் அம்சமே; இறை அம்சமே.

எந்த வெளிப்பாடும் இல்லாத ஆதாரமான இறைவனை அனுபவமாக அறிவது என்பது சாத்தியமான ஒன்றல்ல, அது இயற்கைக்கு விரோதமானது.

வீணையிலிருந்து புறப்பட்ட இசையானது மீண்டும் வீணைக்கே திரும்பிச் சென்று வீணையை அறிய முடியுமா?

அது இயற்கைக்கு விரோதமானது.

நடைமுறை சாத்தியமற்றது.

நாம் நம்முடைய அன்றாட வாழ்வில் எத்தனையோ விதமான அனுபவங்களை அடைந்திருக்கின்றோம்.

நெருப்பைத் தொடும் போது ஓர் அனுபவம், ஐஸ்கட்டியைத் தொடும் போது ஓர் அனுபவம், இனிப்பைச் சுவைக்கும் போது ஓர் அனுபவம், கசப்பை சுவைக்கும் போது ஓர் அனுபவம்

–இப்படி எத்தனையோ விதமான அனுபவங்கள் நமக்கு ஏற்படுகின்றன.

இவை அனைத்தும் நமது உடலில் ஏற்படும் இரசாயன மாற்றங்களாகவும், நரம்பு மண்டலங்களில் ஏற்படும் அதிர்வுகளாகவுமே அமைந்துள்ளன.

நாம் நம்முடைய மனதில் மகிழ்ச்சி, துயரம், பயம், கோபம் போன்ற உணர்ச்சிகளை அனுபவிக்கிறோம். மனதில் ஏற்படும் நினைவுகளே நமக்கு இத்தகைய உணர்ச்சிகளை ஏற்படுத்துகின்றன.

அந்த நினைவுகளும், உணர்ச்சிகளும் நமது உடலில் சில இரசாயன மாற்றங்களையும், நரம்பு மண்டலத்தில் சில கிளர்ச்சிகளையும் ஏற்படுத்துகின்றன.

–அவற்றை மனோ அனுபவங்கள், உணர்ச்சிகள் என்று நாம் கூறினாலுங்கூட அவை அனைத்தும் நமது உடல் அனுபவங்களே.

ஆன்மிக உலகில், ஆன்மிக சாதனைகளின் போது சில பரவச நிலைகள், ஆனந்த அனுபவ நிலைகள் ஏற்படுவதுண்டு.

இவை அனைத்துங்கூட நம் உடலில் ஏற்படும் இரசாயன மாற்றங்களாகவும், நரம்பு மண்டலங்களில் ஏற்படும் கிளர்ச்சியாகவும் மட்டுமே அனுபவம் ஆகின்றன.

நமக்கு ஏற்படும் அனைத்து அனுபவங்களுமே நமது உடல் அனுபவங்களே ஆகும். இதைத் தவிர வேறு எந்த அனுபவங்களும் கிடையாது.

இந்த அனுபவங்களின் வரிசையில்தான் இறை அனுபவம் என்கிற பெயரில் ஏதோ ஒருவிசித்திரமான அனுபவத்தைத் தேடி வருகிறோம்.

அப்படி ஓர் அனுபவமே கிடையாது. இல்லாத ஓர் அனுபவத்தைத் தேடி அலைவது வீண் வேலை மட்டுமே.

ஆனால் நமக்கு ஏற்படும் அனைத்து உணர்ச்சிகளும் இந்த சித் அம்சமான இறைநிலையின் வெளிப்பாடே. அனைத்து உணர்ச்சிகளும் இறை அம்சமே.

மற்றபடி இறை அனுபவம் என்ற பெயரைக் கொண்ட தனித்த அனுபவம் என்று எதுவும் கிடையாது.

சாஸ்திரங்கள் எவையும் இறைவனை அறிந்து அனுபவிப்பதைப் பற்றி எதையுமே பேசவில்லை. சாஸ்திரங்களை விளக்க வந்தவர்களே இத்தகைய குழப்பங்களை ஏற்படுத்திவிட்டனர்.

முக்தி, விடுதலை என்பது முக்கியமானது; உண்மையானது. அனைவரும் அடைய வேண்டியது. இதுதான் முடிந்த நிலை அல்லது நாம் அடையவேண்டிய முழுநிலை.

அதை அடைய நாம் என்ன செய்ய வேண்டும்?

எதுவும் செய்ய வேண்டியதில்லை. இங்கு தான் நாம் சும்மா இருக்க வேண்டும்.

உண்மையில் நம்முடைய மனது முக்தி நிலையில்தான் உள்ளது. விடுதலையோடு தான் உள்ளது. நாம் எதையாவது செய்யும்போது தான் நமது முக்தி நிலை பாதிக்கப்படுகிறது. நமது விடுதலைத்தான் பாதிக்கப்படுகிறது.

அது (நம் மனம்) அதுவாக இயங்குவது தான் முக்தி நிலை, சுதந்திர நிலை.

நம் மனது அதுவாக இயங்க வேண்டும். அதனை நாம் இயக்கக் கூடாது.

நாம் சும்மா இருக்கும் போது தான் அது நடக்கின்றது.

நாம் எதை அறிந்தாலும் அனுபவத்தின் மூலம் அறிகிறோம். அனுபவமாக்கி அறிவதையே அறிதல் என்று கூறுகிறோம்.

அனுபவங்கள் அனைத்தும் வந்து வந்து மறைபவை. ஆனாலுங்கூட அந்த அனுபவத்தைக் கொண்டே அனைத்தையும் அறிய விரும்புகின்றோம்.

ஒரு குழந்தையானது எந்த மன அனுபவத்திலும் தேங்கி நின்றுவிடுவதில்லை.

ஆனால் நமது பகுத்தறிவு வளர வளர நமது அணுகுமுறை மாறி விடுகிறது.

நம் மன அனுபவங்களில் சிலவற்றைப் பிடித்து வைத்துக் கொள்ள விரும்புகின்றோம். சில அனுபவங்களிலிருந்து விடுபட விரும்புகின்றோம்.

இதனால் நம் மனதினுடைய இயற்கையான கள்ளங்கபடமற்ற நிலை பறிபோய்விடுகிறது. எளிமையும், சுதந்திரத் தன்மையும் மறைந்து போய் விடுகிறது. நமது கலகலப்பான தன்மை மறைந்து இறுக்கம் ஏற்பட்டு விடுகிறது.

இழந்த சுதந்திரத்தை மீண்டும் எப்படிப் பெறுவது?

சுதந்திரம் என்பது ஓர் அனுபவம் அல்ல. எல்லா அனுபவங்களையும் சுதந்திரமாக வந்து போக அனுமதிப்பது தான் சுதந்திரம்.

சுதந்திரம் என்பது அனுபவங்களின் சுதந்திரமே.

எந்த அனுபவங்களையும் பிடித்து வைக்க ஆசைப்படாமல் விட்டுவிட வேண்டும் என்ற செய்தியை

ஒருவருக்கு எப்படிப் புரிய வைப்பது?

"எல்லா அனுபவங்களையும் விட சிறந்த அனுபவம் உள்ளது; அதுதான் இறை அனுபவம்."

-என்று கூறி நிகழ்ந்து கொண்டிருக்கும் அனுபவங்களின் மீதுள்ள பிடிப்புகளையெல்லாம் விட்டுவிடும் வழிமுறையாகவே இறையனுபவம் என்ற பெயரில், ஏதோ ஒரு நிலை சிறப்பிக்கபட்டுள்ளது.

ஆனால் உண்மையில் அப்படி ஒரு நிலை - அனுபவம் கிடையாது.

கணிதப் பாடத்தில் ஒரு கணக்கைப் போடும் போது அக்கணிதத்தின் விடையை முதலில் X என்று கூறி அதன் அடுத்த கட்டத்துக்கு வருவார்கள்

பிறகு X ன் மதிப்பைக் கண்டுபிடிப்பார்கள். அதுதான் உண்மையான விடை.

இதுபோல் தான் இறைநிலை அனுபவம் என்பதும் ஒரு X மட்டுமே.

அதைப் பயன்படுத்தி அனுபவங்கள் அனைத்தையும் விடுவித்துவிட வேண்டும். இது தான் Xன் மதிப்பைக் கண்டுபிடிப்பதாகும்.

இறை அனுபவத்தின் உண்மையான பணி இதுதான்.

இந்நிலையில், நாம் நம்முடைய மன அனுபவங்களில் மீண்டும் குழந்தையாகி விடுகின்றோம்.

குழந்தையும் தெய்வமும் ஒன்று என்று வேண்டுமானால் கூறிக் கொள்ளலாம்.



- ஸ்ரீ பகவத்



"புறம் நம் கையில்"

# கேள்வி பதில்



-V.A.P. சரவணன்
செல் : 99942 05880
சேலம்.

கேள்வி: நான் அரசுத் துறையில் உயர்பதவியில் பணிபுரிகிறேன். எனக்குக் கீழே பணிபுரிபவரும், மேலே பணிபுரிபவரும் கடுமையான மனப்பாதிப்பை ஏற்படுத்துகிறார்கள். எனது வேலையைத் தக்க வைத்துக் கொள்ள கடுமையாகப் போராட வேண்டியுள்ளது. எனது வருவாயை நம்பித் தான் குடும்ப வாழ்வு, குழந்தைகளின் எதிர்கால வாழ்வு என அனைத்தும் உள்ளது. எனது பணிக்கு எந்த நேரத்தில் என்ன ஆபத்து ஏற்படுமோ என்று சதா மனம் கொதிப்படைந்து கொண்டே இருக்கிறது. இப்படி மனம் கொதிப்படைவதால் உடல் நரம்பு மண்டலம் பாதிப்படைகிறது. பகவத் ஐயாவின் புரிதலின் படி எனது மனம் இப்படிக் கொதிப்படைவது தாமாக நிகழ்கிறது என்று எனக்குப் புரிகிறது. ஆனால் அவை என் உடலைப் பாதிக்காமல் இருந்தால் பரவாயில்லை. அவை என்னையே முடக்கிப் போட்டுப் படாதபாடு படுத்துகின்றன. இந்தச் சூழ்நிலையில் நான் எப்படி மனதை எதிர்கொண்டு புறத்தில் செயல்படுவது?

பதில் : நாம் ஒரு சூழ்நிலையைச் சந்திக்கும் போது அந்த சூழ்நிலைக்கு ஏற்ப நமது மனதில் ஏதோ ஓர் எண்ணம், உணர்வு ஏற்படும், அப்படி ஏற்படும் எண்ணம், உணர்வு நமது இயல்பு மனப்பதிவுகளுக்கு ஏற்றபடி வெளிப்படும். அப்படித் தாமாக வெளிப்படும் எண்ணம், உணர்வு நமது கட்டுப்பாட்டில் இல்லை. நாம் விரும்பியபடித் தான் தோன்றும் என்று கூற முடியாது. நமக்கு எண்ணமோ, உணர்வோ தோன்றிய பிறகு தான் நமக்கு இப்படி ஓர் எண்ணம், உணர்வு ஏற்பட்டுள்ளது என உணர முடியும். அதற்கு முன்பாக நம்மால் நிச்சயமாக எந்த மாதிரி எண்ணம், உணர்வு ஏற்படும் என்று கூற முடியாது. வெளிப்பட்ட ஒன்றை அறியும் தன்மையில் மட்டுமே நமது மனம் செயல்படுகிறது. வெளிப்படுவதற்கு முன்பாக நம்மால் நிச்சயமாக எந்த ஒன்றையும் உணர முடியாது.

இப்படி ஓர் எண்ணம், உணர்வு நமக்கு ஏற்பட்டுள்ளது என்பதை ஏற்பட்ட பிறகே நாம் புரிந்து கொள்கிறோம். பிறகு நம் அறிவைக் கொண்டு சிந்தித்து வெளிச் சூழ்நிலையை நிர்வாகம் செய்ய எது சரியான செயலோ அதையே செய்கிறோம். இப்படி அகத்தில் தாமாக ஏற்படும் எண்ணத்தையும், உணர்வையும் நாம் உணர்ந்து கொண்டு பிறகு புறத்தில் அறிவை பயன்படுத்தி சிறப்பாக செயல்படுவதை தான் ''அகத்தில் ஒரு குழந்தையாகவும் புறத்தில் அறிவாளியாகவும் செயல்படுவது தான் ஓர் ஞானியின் செயல்பாடு" என்று பகவத் ஐயா குறிப்பிடுகிறார்கள்.

பொதுவாக அரசுப் பணியில் வேலை பார்ப்பவர்கள் பல்வேறு சிக்கல்களைச் சந்திக்க நேரிடும். உங்களுக்கு வேண்டாத நபர்கள் உங்களைப் பற்றி உயர் அதிகாரிகளிடம் பல புகார்களையும், மொட்டைக் கடுதாசிகளையும், வேண்டாத விமர்சனங்களையும் தெரிவிப்பார்கள். மொத்தத்தில் உங்களுக்கு எல்லா விதமான சிக்கல்களையும் தொந்தரவுகளையும் கொடுப்பார்கள். இந்த நிலையில் உங்களைச் சந்திக்கும் உயர் அதிகாரி உங்கள் மேல் பல புகார்களும், விமர்சனங்களும், கடிதங்களும் வந்துள்ளன. கொஞ்சம் பார்த்து நடந்து கொள்ளுங்கள் என்று கூறிவருகிறார். இப்படி உயர் அதிகாரி கூறியதால் நமது வேலைக்கு ஏதாவது தொந்தரவோ, ஆபத்தோ ஏற்பட்டுவிடுமோ, ஏதாவது பிரச்சினையில் மாட்டிக் கொள்வோமோ என்ற பயம் ஏற்பட்டு மனம் சதா கொதிப்படைகிறது. இப்படி மனம் கொதிப்படைவதால் ஏற்படும் உடல் பாதிப்பைத் தான் நீங்கள் குறிப்பிடுகிறீர்கள் ''இப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் எப்படி நடந்து கொள்வது?" என்பது தான் உங்களின் முக்கியமான கேள்வியாக உள்ளது.

நமக்குத் தாமாக ஏற்பட்ட பய உணர்வை எதிர்த்து நம்மால் ஏதாவது செய்ய முடியுமா? நிச்சயமாக நம்மால் எதுவும் செய்ய முடியாது. நமது பய உணர்வைத் தடுக்கவோ, மாற்றி அமைக்கவோ நம்மால் முடியவே முடியாது. இப்படித் தாமாக ஏற்படும் பய உணர்வைத் தான் அக உணர்வு என்று குறிப்பிடுகிறோம்.

நமக்கு ஏன் பய உணர்வு ஏற்படுகிறது? நமக்கு நமது வேலைக்கு ஏதாவது தொந்தரவு ஏற்பட்டுவிடுமோ, நமக்கு ஏதாவது பிரச்சனை ஏற்பட்டுவிடுமோ என்பது தான் பய உணர்வுக்கான காரணம். அப்படி நமக்குப் பய உணர்வு ஏற்படுவதால் தான் நாம் நம்முடைய வேலையைத் தக்க வைத்துக் கொள்ள எல்லாவிதமான புறமுயற்சிகளையும் மேற்கொள்கிறோம். நமக்கு பயமே ஏற்படவில்லை என்றால் நாம் நம்முடைய வேலையைத் தக்கவைக்க எந்த முயற்சியும் எடுக்க மாட்டோம். நமக்கு ஏற்படும் பய உணர்வு தான் நாம் மற்றவர்களிடம், நமக்கு கீழ் பணிபுரிபவர்கள், நமக்கு மேல் அதிகாரிகள் எனப் பலரிடமும் நாம் எப்படி எல்லாம் நடந்து கொள்ள வேண்டும், நமது பணியை எப்படி தக்க வைத்துக் கொள்வது என்ற முயற்சிக்கு காரணமாக உள்ளது. நாம் புறத்தைச் சிறப்பாக நிர்வாகம் செய்வதற்காகத் தான் பய உணர்வே ஏற்படுகிறது.

நமக்கு ஏற்பட்ட பய உணர்வை எதிர்த்து நம்மால் எதுவும் செய்யமுடியாது என்பதை நாம் நன்றாகப் புரிந்து கொள்கிறோம். பிறகு நம் கைவசம் என்னதான் வாய்ப்பு உள்ளது? நமது பயத்தை எதிர்க்க முடியாது, ஆனால் நம்மைப் பாதுகாத்துக் கொள்ளத் தேவையான புறச் செயலை நமது அறிவைப் பயன்படுத்திச் சிறப்பாகச் செய்து கொள்ள முடியும். அப்படி நமது புறச்செயலை சிறப்பாகச் செய்வது ஒன்று மட்டுமே நமது கைவசம் உள்ள வாய்ப்பு. நமது பய உணர்வுக்கு எதுவும் செய்ய

முடியாவிட்டாலும் நமது புறச்செயலை கொண்டு நம் பாதுகாப்புக்கு ஏற்றபடி சிறப்பாக செயல்படுவது நம் கைவசம் மட்டுமே உள்ளது.

இங்கு நமக்கு ஏற்பட்ட பய உணர்வை நமது புறச்செயலுக்குத் தேவையான தூண்டுதலாகப் பயன்படுத்திக் கொண்டோம். இப்போது நமக்கு மேலும் ஓர் கேள்வி. புறச் செயலின் தூண்டுதலுக்கு போகவும், அதிகப்படியான பய உணர்ச்சி அகத்தில் ஏற்படுகிறது. இப்போது நாம் என்ன செய்வது? அப்படி ஏற்படும் பய உணர்ச்சிக்கு நாம் எதுவுமே செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொள்வதோடு நமது வேலை முடிந்து விடுகிறது. அந்தப் பய உணர்ச்சி சம்மந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லை என்று நாம் முடித்துக் கொண்டால் போதும். நாளடைவில் அதிகப்படியான பய உணர்வும், தேவையற்ற மனக்கலக்கமும் படிப்படியாகக் குறையத் தொடங்கும். நமது அறிவுக்கு எங்கு வேலை உள்ளது, எங்கு வேலை இல்லை என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட்டால் போதும் காலப் போக்கில் எல்லாமே சரியாகிவிடும்.

பொதுவாக நமக்குப் பிரச்சினை என்றால், அது அகம் சம்பந்தப்பட்டதா அல்லது புறம் சம்பந்தப்பட்டதா என்பதை முதலில் கண்டுபிடிக்க வேண்டும். அகத்தில் ஏற்படும் உணர்ச்சிகளைப் புறத்தில் செயல்படுவதற்கான தூண்டு கோளாக எடுத்துப் பயன்படுத்தி கொள்ளலாம்.செயலை நிறைவாக செய்த பிறகும், தேவையற்ற மன உணர்ச்சிகளை அப்படியே விட்டு விட்டால் போதும். அவை தாமாகவே சரியாகிவிடும். எந்த ஒரு பிரச்சினைக்கும் நமது தரப்பில் செயல் வடிவில் அதிகப்படியான முயற்சி என்னவோ அதை செய்வதோடு நமது வேலை முடிந்து விடுகிறது. அப்படிச் செயல் வடிவில் நாம் நிறைவாக செயல்படும்போது நமக்கு இப்படி செயல்படாமல் விட்டு விட்டோமோ என்ற குற்ற உணர்ச்சியோ, நாம் இன்னும் கொஞ்சம் நன்றாகச் செயல்பட்டு இருக்கலாமே என்ற வருத்தமோ ஏற்படாது.

இந்தப் புரிதலுக்கு முன்பு பிரச்சினைகளைத் தலையில் சுமந்து கொண்டு படாதபாடு பட்டுக் கொண்டு இருந்தோம். இந்த புரிதலினால் தலையில் சுமந்த பிரச்சினைகளை தரையில் இறக்கி வைத்து விட்டுப் பிரச்சினையையும், நம்மையும் பிரித்து பார்த்து, நம்மால் இந்தப் பிரச்சினைக்கு என்ன செய்ய முடியுமோ அதை செய்து முடிக்கும் நிலைக்கு வருகிறோம்.

ஓர் உதாரணத்துடன் அக-புற செயல்பாட்டைப் புரிந்து கொள்வோம். ஓர் ஆறு ஓடிக்கொண்டே இருக்கிறது. அது பார்ப்பதற்கு ஒரு தோற்றமாக காட்சி அளிக்கிறது. ஆறு என்பது தண்ணீர் கணத்திற்கு கணம் மாறி ஓடி மறைவதையே குறிக்கிறது. நாம் ஆற்றின் கரையில் இருக்கிறோம். நமக்குத் தண்ணீர் தாகம் ஏற்படுகிறது. ஆற்றிலிருந்து தண்ணீரை எடுத்து அருந்தி தாகத்தைத் தணித்துக் கொள்கிறோம். நமக்குத் தண்ணீர் தாகம் இல்லை என்றால் நாம் ஒன்றும் செய்ய தேவையில்லை ஆறு தானாக ஓடிக் கொண்டே இருக்கும்.

அதுபோல் நம் மனதில் எண்ணங்கள், உணர்வுகள் ஆறு போல் ஓடி மறைந்து கொண்டே இருக்கும். நமது புறச் செயலுக்குத் தேவையான எண்ணத்தை எடுத்துப் பயன்படுத்தி கொண்டு நமது புற வாழ்க்கை தேவையை நிறைவு செய்து கொள்ளலாம். நமக்குப் புறச்செயல் தேவையில்லாத நேரங்களில் நாம் நமது எண்ண ஓட்டத்தை ஒன்றும் செய்யத் தேவையில்லை. அவை தாமாகவே ஓடி மறைந்து விடும்.

நாம் ஓடிக் கொண்டே இருக்கக் கூடிய ஆறாக இருக்கும் போது அதில் எல்லாவிதமான எண்ணங்கள், உணர்வுகள் என அனைத்தும் ஓடி மறைந்து விடும். எந்த எண்ணமும், உணர்வும் தேக்கமடைவது கிடையாது. சாக்கடைத் தண்ணீர் கூட ஓடிக் கொண்டே இருக்கும் போது சுத்தமான ஆறாக மாறிவிடுகிறது. அதுபோல் நமது எல்லா எண்ணங்களும், உணர்வுகளும் பிரவாகத்தில் ஓடி மறைந்து நம்மைத் தூய்மைப் படுத்திவிடும்.

"தண்ணீர் தேங்கினால் சாக்கடை, ஓடினால் ஆறு"



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்தச் சகப் பயணியின் வணக்கம்,

நமது பகவத் பாதையில் குறைந்த அன்பர்களுடன் தொடங்கப்பட்ட நமது பயணம், தற்போது ஆயிரக்கணக்கான அன்பர்களுடன் ஞானத்தைப் பகிர்ந்து கொண்டு அனைவருக்கும் பயன்படும் வண்ணம் பயணத்தைச் சிறப்பாகத் தொடர்ந்து கொண்டு இருக்கிறோம்.

இந்தப் பயணம் நல்ல உள்ளம் கொண்ட நண்பர்கள் பலரை நமக்கு அறிமுகம் செய்துள்ளது. அன்பர்களாக வந்தவர்கள் நண்பர்களாக மாறி வருகிறார்கள். நமது பாதையில் வரும் பகவத் ஐயாவின் கட்டுரைகள், கேள்வி-பதில்கள், ஜென் கதைகள் என அனைத்தும் வாழ்வில் நாம் சந்திக்கும் பிரச்சினைகளுக்குத் தீர்வாகவும் ஞானத் தெளிவை பெற உதவியாகவும் இருக்கிறது.

இத்தெளிவு உலக மக்கள் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்பதே நமது நோக்கம், அந்த நோக்கத்திற்கு இணங்க நம்மைச் சார்ந்தவர்களையும், நண்பர்களையும் நமது பயணத்தில் இணைத்துக் கொள்வதை நம் கடமையாகக் கருதி செயலாற்ற வேண்டுகிறேன்.

நாம் நமது பகவத் மிஷன் மூலம் பல பணிகளைச் செய்து வந்தாலும் தற்போது ஓர் அத்தியாவசியப் பணியைத் தொடங்கியுள்ளோம். நமது பகவத் ஐயா அவர்களுக்கான தங்குமிடம் ஒன்றையும், நம்மை போன்றவர்களும் புதிய அன்பர்களும் ஐயாவுடன் தங்கியிருந்து உரையாடி ஞானத்தெளிவு பெற்றுச் செல்ல உகந்த இடம் ஒன்றையும் கட்டும் பணிகளை நமது சேலம் திருவருட்சோலையில் தொடங்கியுள்ளோம். 26.07.2015 அன்று திருவருட்சோலையில் நடைபெற்ற கலந்தாலோசனைக் கூட்டத்தின் முடிவின் படி இத்தங்குமிடத்திற்கு "ஸ்ரீ பகவத் பவன்" எனப் பெயரிட்டுள்ளோம்.

இக்கூட்டத்திற்குப் பிறகு பல அன்பர்கள் அவர்களாகவே நம்மோடு தொடர்புகொண்டு இப்பணியில் அவர்களையும் இணைத்துக் கொள்ளும் வண்ணம் நன்கொடைகளை வழங்கி வருகிறார்கள். இது மனதிற்கு நெகிழ்ச்சியாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கிறது.

நமது பகவத் ஐயாவின் தங்கும் இடமாக அமையக் கூடிய ஸ்ரீ பகவத் பவனின் உருவாக்கத்தில் நமது பாதையில் பயணிக்கும் நம் அனைவரது பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பது எனது விருப்பம்.

இங்குப் பங்களிப்பு எவ்வளவு என்பது முக்கியமல்ல. இது அவரவர் வாய்ப்பு வசதிக்கு ஏற்ப இருக்கலாம்.

இப்பணியில் பங்குகொள்ளும் மனமே முக்கியம். இதை நம் அனைவரது கடமையாகவே கருதி இந்தப் பணியில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

## வேண்டுகோள்

சேலம் திருவருட்சோலையில் நமது "ஸ்ரீ பகவத் பவன்" கட்டடப் பணிக்கான பூமி பூஜை 23.08.2015 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இதில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சென்னை, பரமத்தி வேலூர், கோவை மற்றும் சேலத்தைச் சேர்ந்த அன்பர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

ஸ்ரீ பகவத் பவனின் கட்டடப் பணி தொடங்கப்பட்டுவிட்டது. இப்பணியை அதிக பட்சமாக 6 மாதத்திற்குள் முடிக்கத் திட்டமிட்டுள்ளோம். இப்பணிக்காகப் பல அன்பர்கள் தாங்களாகவே முன்வந்து தங்களது பங்களிப்பை ரூ.1000/- முதல் ரூ.300,000/- நன்கொடையாக வழங்கியுள்ளார்கள் இருப்பினும் கட்டடப் பணிக்கான தொகை பற்றாக்குறையாகவே இருக்கிறது. மேலும் இக்கட்டடப் பணியை 6 மாதத்திற்குள் முடிக்கத் திட்டமிட்டுள்ளதால் அதற்கான தொகை விரைவாகவே தேவைப்படுகிறது. எனவே வாய்ப்பும் வசதியும் உள்ளவர்கள் இப்பணிக்காக தங்களது பங்களிப்பையும் வழங்குமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இதுவரை தங்களது பங்களிப்பாக ரூ.25000/-மும், அதற்கு மேலும் கொடுத்து ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக (Founders) இணைந்துக் கொண்டவர்கள்.

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்
2. திரு. **E.ராமு,** சென்னை
3. திரு. **சிவகுரு,** கரூர்
4. திரு. **S.முருகேசன்,** சென்னை
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை
8. திரு. **ஜீவமணி,** சேலம்
9. திரு. **சரவணன்,** சேலம்
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்
11. திரு. **குணாலன்,** கோவை
12. திரு. **வெங்கட்பிரபு,** சேலம்
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. **செந்தில்** தர்மபுரி.



## நெரூரில் 3 நாள்

# ஞானமுகாம்

### வழங்குபவர் : ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்

### இடம் : காஞ்சி சங்கர மட வளாகம், நெரூர் அக்ரஹாரம்.

நாள் : 20.11.2015 வெள்ளிக்கிழமை இரவு 7.00 மணி முதல்
22.11.2015 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.00 மணி வரை

ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மைய அன்பர்கள் நவம்பர் மாதத்தில் நெரூரில் பகவத் ஐயா அவர்களின் 3 நாள் ஞானமுகாம் ஏற்பாடு செய்துள்ளனர்.

.கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் காவேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஆன்மிகத்தில் சிறப்பு வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்திற்கு அருகில் நெரூர் அக்ரஹாரத்தில் அமைந்துள்ள காஞ்சி சங்கர மடத்தில் நடைபெற உள்ளது.

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்? | நினைவும் சிந்தனையும்**
**கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

நன்கொடை ரூ. 1200/- (தங்குமிடம், உணவு உட்பட)

20.11.2015 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப்பின் அறிமுக வகுப்போடு ஞானமுகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஆண்கள் தங்குவதற்கும், பெண்கள் தங்குவதற்கும் தனித்தனி இடவசதிகள் உள்ளன.

நமது ஞானமுகாம் எந்த ஆன்மிக அமைப்போடும் முரண்பாடு கொண்டதன்று, எனவே எந்த ஆன்மிக அமைப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் ஞானத்தேடுதல் கொண்டவர்களாக இருப்பின் இந்த ஞானமுகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெறலாம்.

வழி : கரூரிலிருந்து திருக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல் துறை என்கிற சதாசிவன் கோயில் பஸ் நிறுத்தத்தில் இறங்க வேண்டும். பஸ்நெ.4 மற்றும் மினிபஸ் வசதி உள்ளது.

கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் மார்கெட் ஸ்டாப் வரை நடந்து சென்று ஞானமுகாமிற்கு வரலாம்.

ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் பெயரை முன்பதிவு செய்வது அவசியம்
முன்பதிவுக்கு

திரு. **இராஜகோபால்** செல் : 93605 79181
திரு. **சுவாமிநாதன்** செல் : 99422 89420
திரு. **மோகன்** செல் : 92454 40575
திரு. **பாலசுப்ரமணியம்** செல் : 97872 53751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!



## பழனியில் 3 நாள்

# ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **மெய்த்தவ பொற்சபை,**

நேதாஜி நகர், திண்டுக்கல் ரோடு, **பழனி.**

நாள் : 02-10-2015 வெள்ளிக்கிழமை காலை 8-30 மணி முதல் 4-10-2015 ஞாயிறு மதியம் 3-00 மணி வரை

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்? | நினைவும் சிந்தனையும் | கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

நன்கொடை ரூ.1500/- (தங்குமிடம் மற்றும் உணவு உட்பட ) தங்குவதற்கு ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி இடவசதி உள்ளது. அக்டோபர் 2ந் தேதி காலை 8.30 மணிக்கு சிற்றுண்டி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் காலை சிற்றுண்டிக்கே வருமாறு அன்புடன் அழைக்கப்படுகிறார்கள்.

முன்பதிவு செய்வதற்கும் மேலும் விபரங்களுக்கும்

அருள்நிதி **N.சோமசுந்தரம்** ஐயா அவர்களிடம்

தொடர்பு கொள்ளவும் செல் : 9942327770, 9150550108



**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3. செல்: 9789165555, 9994205880

www.pravaagam.org, www.sribagavath.org - youtube: enlightenment/sri bagavath

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது தற்போது மாதம் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர் பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ.100/- | ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/- | ஆயுள் சந்தா - ரூ, 1000/-

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

















23-08-2015 அன்று ஆத்தூர் மையம்
துவக்க விழாவின் போது அன்பர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா



23-08-2015 பகவத் பவன்
கட்டடப் பணிக்கான
பூமி பூஜையின் போது



23-08-2015 பகவத் பவன்
கட்டடப் பணிக்கான பூமி பூஜையின்
போது அன்பர்களுடன் ஐயா



23-08-2015 ஆத்தூர் மையத்தில்
ஐயாவின் சிறப்புரையின் போது
கலந்து கொண்ட அன்பர்கள்

# ஜென் கதை

## "இயல்பும், செயலும்"

அவர் ஒரு பெரிய ஜென் துறவி. பலர் அவரிடம் மன நிறைவாக வாழ்வதற்கான வழிமுறைகளைப் பெற்றுவந்தனர்.

ஒரு நாள், சில ஆண்டுகளுக்கு முன்னால் அந்தத் துறவியிடம் படித்த சீடன் ஒருவன் அவரைத் தேடி வந்தான் "குருவே எனக்கு ஒரு குழப்பம்" என்றான்.

"என்ன?"

"நான் உங்களிடம் கற்ற வழிமுறைகளை அக்கறையாகப் பின்பற்றுகிறேன். அவை எனக்கு மிகுந்த மன அமைதியையும் புத்திக் கூர்மையையும் தருகின்றன. அதை அனுபவப்பூர்வமாக உணர்கிறேன். உங்களுக்கு நன்றி!"

"மகிழ்ச்சி, ஆனால் ஏதோ குழப்பம் என்று சொன்னாயே?"

"ஆமாம் குருவே, நான் கற்ற வழிமுறைகளில் கவனம் இல்லாத வேளைகளில் நான் முழுமையான நல்லவனாக நடந்து கொள்வது இல்லை என்று உணர்கிறேன். சில நேரங்களில் நானும் ஒன்றிரண்டு தவறுகளை செய்துவிடுகிறேன். உங்கள் வழிமுறைகளைப் பழகிய ஒருவன் இப்படிச் செய்வது சரிதானா? இதை யோசிக்கும் போது என் உள்ளம் கூனிக் குறுகிப்போகிறது!"

குருநாதர் சிரித்தார். "நீ எனது வழிமுறைகளையும் செய்கிறாய், தவறுகளும் செய்கிறாய் இல்லையா?"

"ஆமாம் குருவே, அது தவறில்லையா?"

"இல்லை, நீ தினமும் எனது வழிமுறைகளையும் செய்கிறாய், தினமும் தவறும் செய்கிறாய். என் வழிமுறையை பின்பற்றுவதற்காக பெருமையும் படாதே! தவறு செய்ததற்காக குற்ற உணர்ச்சியும் கொள்ளாதே! கொஞ்ச நாளில் இதில் ஏதேனும் ஒன்று நின்று விடும்."

"ஐயோ, ஒரு வேளை தவறு நிற்பதற்குப் பதில் உங்களது வழிமுறை நின்றுவிட்டால்! என்ன செய்வது?"

"அதுவும் நல்லது தான் உன்னுடைய இயல்பு எது என்று புரிந்து விடும் இல்லையா?"

"ஆமாம் குருவே! என் இயல்பை எப்படி மாற்றுவது?"

"உன் இயல்பை நீ மாற்ற முடியாது என்பதையும் புரிந்து கொள்.

உன் இயல்பை மாற்றும் முயற்சியையும் கைவிட்டு விட்டு அதனால் ஏற்படும் வருத்தத்தையும் விட்டுவிட்டு உன் செயலின் பக்கம் உன் கவனத்தை செலுத்து. அப்போது என் வழிமுறையே உனக்கு பாடமாக அமையும். கொஞ்ச நாளில் அதுவே உன் வழிமுறையாகிவிடும். பிறகு உனது வழிமுறையே உனது தவறுகளை குறைத்து விடும்." என்றார் துறவி.

சீடன் புரிந்து கொண்டான்.

"இயல்பு நம் கைவசம் இல்லை, செயல் மட்டுமே நம் வசம் உண்டு!

செயலை மாற்ற மாற்ற இயல்பு நம்மையறியாமலேயே மாறுவது தெரியாமல் மாறிவிடும்."

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555